கற்பாதிகள் முக்தனிடத்து அந்நியஜீவர்களால் வியவகரிக்கப்படுகின்றன. அந்த ஈசுவரன் பரமார்த்ததிருஷ்டியாற் சுத்தர். அவரிடத்தில் ஒரு குணமு மில்லை. ஆனால் அவர் நிர்க்குணர். ஆகையால் சத்தியசங்கற்பாதிகளில்லை.

சமுசாரதசையிலும் ஜீவன் பரமார்த்தமாக நிர்க்குணமும் சுத்தமுமா யிருந்தாலும் அவனுக்குச் சமுசாரதசையில் அவித்தையால் கர்த்திருத்தவ போக்திருத்துவங்கள் பிரதீதியாகின்றன.

ஈசுவரனுக்கு எக்காலத்திலும் தன்னிடத்திலாவது வேறிடத்திலாவது சமுசாரம் பிரதீதியாகிறதில்லை. ஆகையால் ஈசுவரன் எப்போதும் அசங்கன்; நிர்க்குணனும் சுத்தனுமாகின்றான். ஆகவே ஈசுவரனுடன் எந்த அபேத முண்டோ அந்த அபேதமே சுத்தப்பிரஹ்மத்தோடுள்ளதாம்.

ஈசுவரனோடுள்ள அபேதத்தினைச் சுத்தப்பிரஹ்மத்தோடுள்ள அபேத மெனக் கொள்ளாவிடின், ஈசுவரனுக்குச் சுத்தப்பிரஹ்மத்துடன் ஐக்கியம் ஒருகாலத்து மாகமாட்டாது. ஏனெனின், ஜீவனைப்போல் ஈசுவரனுக்கு உப தேசத்தா லுண்டாகும் ஞானமும் விதேகமோக்ஷமும் ஒருகாலத்தி லுமுண் டாகமாட்டா. எப்போதுமுள்ள அவருடைய ரூபம் சுத்தமன்று. ஆதலால் ஜீவ னைக்காட்டி லும் குறைவாக ஈசுவரனும் சதா பத்தனென்று சித்திக்கும். ஆகை யால் இது மதிக்கத்தக்கதாம்:—

1. ஈசுவரனுக்கு ஆவரணமில்லை. ஆகையால் உபதேசஜந்நியஞானத்தின் அபேக்ஷையில்லை.

2. ஆவரணமில்லாமையாற் பிராந்தியில்லை. ஆதலால் ஈசுவரன் நித்திய ஸர்வஞ்ஞன் நித்தியமுக்தன்.

3. மாயையும் அதன் காரியமும் ஆத்மாவினிடத்திற் பிரதீதியாகிறதில்லை. ஆகையால் சதா அசங்கன். இதனாலேயே சுத்தன்.

இவ்விதத்தால் ஈசுவரனோடுண்டாம் அபேதமே சுத்த சேதனத்தோடுண் டாம் அபேதமாம்.

திருஷ்டாந்தத்தாலும் ஈசுவரனோடுதான் அபேதம் சித்திக்கின்றது. மடத்திற் கடமில்லாமற் போகும்போது மடாகாசத்தில் கடாகாசம் லய மாகிறது;மகாகாசத்தில்லயமாகிறதில்லை. அதுபோல் வித்துவானுடைய சரீரம் ஈசுவரனாற் செய்யப்பட்ட பிரஹ்மாண்டத்தில் நஷ்டமாகிறது. பிரஹ்மாண்ட மெல்லாம் ஈசுவரசரீரமாகிய மாயையில் அந்தர்ப்பூதமாயிருக்கிறது. வித்துவா னுடைய ஆத்மா விதேகமோக்ஷத்தில் பிரஹ்மாண்டத்துக்கு வெளியே போகிறதில்லை. ஆதலால் ஈசுவரனுடன் அபேதஞ் சித்திக்கிறது. ஆனால் எப் படி மடாகாசத்துடன் கடாகாசத்துக்கு அபேதஞ் சித்திக்கிறதோ அந்த மடா காசம் மகாகாசரூபமாகவே இருக்கிறதோ அப்படி ஈசுவரனுடன் அபேதஞ்

யிருக்கிறது. ஜாக்ர ஈசுவரன் * சுத்தப்பிரஹ்மமே. ஆதலால் சுத்தப்பிரஹ்மத்தின் அடைவுண்டாகிறது.

## 526. இப்பாஷைநூலைச் சொல்லுவதின் பிரயோஜனம்:—

இவ்விதமாக அநேக இரத்தினங்கள் அடங்கியதும் இரகசியமான வேத சித்தாந்தங்கள் அடங்கியதுமான விசாரசாகர மெழுதப்பட்டு விவேகத்துடன் பிரகடனஞ் செய்யப்பட்டது. வியாகரணசாஸ்திரம் முழுமையும் பார்த்தேன். சாங்கிய நியாயசாஸ்திரங்களையும் வெகு சிரமப்பட்டுப் பார்த்தேன். அத்துவைதக் கிரந்தங்கள் முழுமையும் பார்த்தேன். பார்க்காத கிரந்தமொன்றுமில்லை. கடினமான அந்நிய மதஸ்தர்களுடைய சித்தாந்தங்களையும் ஆராய்ந்துபார்த்தேன். வேதங்களையும் முழுகிப் பார்த்தேன். அப்படிப்பட்ட என்னால் இந்தப்பாஷாகிரந்தம் செய்யப்பட்டது. இதை எழுதுவதில் நான் வெட்கப்படவில்லை. பரோபகாரசிந்தையே இதை எழுதியதற்குக் காரணமாம். வியாகரணமின்றி ஸமஸ்கிருதகிரந்தங்களை † மந்தபுத்தியுள்ளவர்கள் படிக்க

---

* இங்கு இது இரகசியமாம்:—ஞானவான்களது திருஷ்டியால விதேகமோக்ஷத்திற்குமுன் பிரஹ்மாண்டமுதலிய ஜகதது எதுவும் இல்லை; ஆனால் சுத்தப் பிரஹ்மமே இருக்கிறது. ஆதலால் அவனுடைய திருஷ்டியினாலோ சுத்தப் பிரஹ்மத்தோடுதான் அபேதமுண்டாகிறது அதுவே அவனுக்குச் சுத்தத்தின் அடைவாம்.

அஞ்ஞானிகளின் திருஷ்டியால் பிரஹ்மாண்டமுதலியன எப்படியோ அப்படியே (உள்ளவாறே) தோற்றுகின்றன. ஆதலால அவர்கள் திருஷ்டியினால் ஞானிக்கு ஈசுவரனோடு (ஈசுவரனது தேகவடிவ பிரஹ்மாண்டத்தோடு) அபேதமுண்டாகிறது. அந்த ஈசுவரன் உண்மையில் சுத்தப்பிரஹ்மமே. இதனாலும் ஞானிககுச் சுத்தப்பிரஹ்மத்தின் பிராப்தியுண்டாகிறது

முற்கூறிய விதேகமோக்ஷத்தில் ஞானியாகிய ஜீவனுக்குப் பிரஹ்மத்தோடுண்டாம் அபேதமெதுவோ அதில் ஆபாசவாதமுதலிய வெவவேறு வேதாநதபக்ஷங்களின் எவ் விசாரங்களுளவோ அவை விருத்திப்பிரபாகரத்தின் எட்டாவது பிரகாசத்தில் விஸ்தாரமாய் எழுதப்பட்டிருககின்றன. அவை இந்நூலின் ஆறாவது தரங்கத்துள்ள 441-வது பிரசங்கத்தின் டிப்பணியிலும் சுருககமாய் எழுதப்பட்டிருககின்றன.

† எவனிடத்தில் கயிறும் செம்புமிருக்கிறதோ அவன் கிணற்று ஜலத்தைக் குடிக்கக் கூடியவனாகின்றான். எவனிடததில் அநதச் சாமக்கிரிகளில்லையோ அவன் கிணற்று ஜலத்தைக் குடிக்கக்கூடியவனாகான். அஙஙனமாயினும் வாவியின் ஜலத்தையாவது அல்லது மதுரமான ஏரியின் ஜலத்தையாவது அநாயாஸமாகக் குடிக்கக்கூடியவனாகின்றான். அதுபோல எவனுக்குக் காவியம் கோசம் வியாகரணவடிவசாமக்கிரியிருககின்றனவோ அவன் சம்ஸ்கிருதநூல்களின் அர்த்தத்தைத் தாற்பரியத்தோடு அறியக்கூடும். எவனிடத்து அச்சாமக்கிரிகளில்லையோ அந்தப்புருஷன் மந்தபுத்தியுடையவனாவன். ஆதலால் அவன் சம்ஸ்கிருதநூல்களின் பொருளை அறியக்கூடாதவனாயினும் அந்த மந்த புருஷன் இப்பாஷைநூலின் அர்த்தத்தைப் பிரயாஸையின்றி யறிவான். அதனால்

முடியாது. இந்தக் கிரந்தத்தை வருத்தமின்றிப் படித்துப் பரமானந்தத்தை யடையக்கூடும்.

## 527. மங்கலாசரண பூர்வகமான கிரந்தசமாப்தி.

தில்லிமாநகரத்தின் மேற்குத்திசையில் பதினெட்டுயோசனை (32-மைல்) தூரத்தில் * கிஹடோலியென்னும் ஊரில் இந்நூல் முற்றுப்பெற்றது.

ஞானிகள் விதேகமுக்தியில் எதனோடு அபேதமாகின்றனரோ அந்தத் தாது வாகிய காரணவடிவரை நான்கு வேதங்களும் துதிக்கின்றன. நாமரூபமான வியபிசாரியில் உட்கலந்துள்ள ஏகமான உவமையற்ற அஸ்திபாதிப்பிரியவடிவம் தாதுபதத்தின் இலக்ஷியமாம்.

---

அவன் பரமானந்தத்தையடைகவென்னும் முதன்மைபெற்ற தயையும் தர்மமுமாகிய காரணத்தால் இந்தப்பாஷைநூலாகிய வாவியை (இறங்குகிணற்றை) அல்லது ஏரியைச் செய்தருளினர். அதன் விருத்தியின்பொருட்டும் அதிக மதுரமுண்டாதற்பொருட்டும் அதற்கு இந்த டிப்பணிவடிவ வாய்க்கால்கள் ஆக்கப்பட்டன. அவையும் பாஷையறிபவர்களுக்கு விசேஷ சுகத்தைத் தருவனவாயிருத்தலின் இதத்தைச் செய்வனவாம்.

* கிஹடோலிக்கிராமத்தில் ஸ்ரீ நிச்சல்தாஸரது குருபரம்பரை யிருக்கிறது. அங்கு இப்போதும் அவர்களது சிஷ்யகிளைகளுமிருக்கின்றன; அவர்கள் சங்கிரகஞ் செய்திருந்த நூல்களும் இருக்கின்றன.

ஜீவன்முக்தி விதேகமுக்தி வர்ணனமென்னும்

ஏழாவது தரங்கம் முடிந்தது.

---

ஸ்ரீ விசாரசாகரம் முற்றுப்பெற்றது.



உ

# ஸ்ரீ விசாரசாகரத்தின்

## அகாராதி அட்டவணை.

டி என்பது டிப்பணியைக் குறிப்பிடுகிறது.

## ஆ

## ந

ஸ



ஹ



க்ஷ



ஸ்ரீ



அகராதி சொல் அட்டவணை முற்றிற்று.